

## தமிழ்நாடு பெயர் சூட்டக் கோரி உயிர்நீத்தப் போராளி

# க.பெ.சங்கரலிங்கனார்

1953ஆம் ஆண்டு 'விசாலா ஆந்திரா' கேட்டு உண்ணாநிலைப் போராட்டத்தில் உயிர் நீத்தவர் பொட்டி சிறிராமுலு. அதுபோலவே சென்னை மாகாணத்திற்குத் தமிழ்நாடு பெயர் சூட்டக்கோரியும், மொழிவழித் தமிழ் மாகாணம் கோரியும் உண்ணாநிலைப் போராட்டம் நடத்தி வீரச்சாவடைந்தவர் ஈகி சங்கரலிங்கனார் ஆவார்.

இவர் விருதுநகரில் 1895ஆம் ஆண்டு பெரிய கருப்பசாமி - வள்ளியம்மை இணையருக்கு மகனாகப் பிறந்தார். இவர் திருமால் நாடார் ஓலைப் பள்ளியிலும், சத்திரிய வித்தியா பள்ளியிலும் தொடக்கக் கல்வியை கற்றார். ஞானாதிநாத நாயனார் பள்ளியில் எட்டாம் வகுப்போடு இவரின் படிப்பு நின்றுபோனது.

இளம் அகவையிலேயே சங்கரலிங்கனாருக்கு வ. உ. சி.யின் இந்திய விடுதலைப் போர்க்குரலைக் கேட்கும் வாய்ப்பு கிடைத்தது. அதுமுதல் தம்மை முழுமையாக இந்திய விடுதலைப் போரிலே ஈடுபடுத்திக் கொண்டார்.

1915இல் செந்தியம்மாள் என்பவரை திருமணம் முடித்தார். 1922இல் காந்தியின் தலைமையில் பேராயக் கட்சி இயங்கிய போது கதர் இயக்கம் தீவிரம் பெற்றது. அப்போது தான் மட்டுமல்லாது தமது குடும்பத்தினரையும் கதராடை உடுக்கச் செய்தார். விருதுநகரில் காதி வஸ்திராலயம் என்ற பெயரில் கடை ஒன்றைத் திறந்து கதர் குறித்து விழிப்புணர்வு ஊட்டினார்.

1925இல் காந்தியை மும்பையில் சந்தித்ததோடு அங்கு சில காலம் தங்கியிருந்து கதர் பரப்புரையை மேற்கொண்டார். 1930இல் காந்தி நடத்திய தண்டி பயணத்திலும் பங்கு கொண்டார். தமிழகம் திரும்பிய சங்கரலிங்கனார் திருச்சி, கரூரில் நடந்த சத்தியாகிரகப் போராட்டத்திலும் கலந்து கொண்டார். அப்போது ஆறு மாத கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு திருச்சி சிறையில் அடைக்கப்பட்டார். இந்திய விடுதலைக்குப் பிறகும் காந்திய நெறியை வழுவாது கடைபிடித்து வந்தார்.

1955ஆம் ஆண்டில் சென்னை மாகாணம் மொழி வாரியாகப் பிரிக்கப்பட வேண்டும் எனும் கோரிக்கை வலுவாக எழுந்தது. அதனோடு இணைந்து சென்னை மாகாணத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் சூட்டும் கோரிக்கையும் அப்போதே எழுந்தது. 29. 11. 1955இல் தமிழரசு கழகக் செயற்குழுக் கூட்டத்தில் முதன்முதலில் ம. பொ. சிவஞானம் அவர்களால் 'தமிழ் மக்கள் வாழும் பிரதேசத்தை மெட்ராஸ் ஸ்டேட் என்றழைக்கப்படுவதை எதிர்க்கின்றது, மத்திய, மாநில அரசுகள் ராஜ்ஜியத்தின் பெயரைத் தமிழ்நாடு என்று பெயரிடப்பட வேண்டும்' என்று தீர்மானம் நிறை வேற்றப்பட்டது. அதற்கு முன்பே தமிழ்நாடு பெயர் மாற்றம் குறித்து 1953இல் ம. பொ. சி. சட்டமன்ற மேலவையில் முதல் குரலாக பதிவு செய்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

அதன்பிறகு 19. 01. 1956இல் ஜி. உமாபதி இல்லத்தில் நடந்த அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் தேவிகுளம், பீர்மேடு தாலுக்காக்களை மீட்கக் கோரியும், தட்சிண ராஜ்ஜியத்

திட்டத்தை எதிர்த்தும், சென்னை ராஜ்ஜியத்திற்கு தமிழ்நாடு என பெயரிடக் கோரியும் 20. 02. 1956இல் முழு கடையடைப்பு நடத்தப்படுவதாக தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இக்கூட்டத்தில் ம. பொ. சி. அண்ணாதுரை, பாரதிதாசன், பி. டி. இராசன், கா. அப்பாத்துரையார், ப. ஜீவானந்தம், சி. பா. ஆதித்தனார், நாரண துரைக்கண்ணன், மணலி கந்தசாமி ஆகியோர் பங்கேற்றனர். அதன்படி பிப். 20ஆம் நாளன்று தமிழகமெங்கும் கடையடைப்புப் போராட்டம் வெற்றிகரமாக நடந்தேறியது.

28. 03. 1956இல் சென்னை மாகாணச் சட்டமன்றத்தில் மாநில புனரமைப்பு மசோதா கொண்டு வரப்பட்டது. அம்மசோதா விவாதத்தில் இந்தியப் பொதுவுடைமைக் கட்சித் தலைவர் ப. ஜீவானந்தம் பங்கேற்று தமிழ்நாடு பெயர் மாற்றக் கோரிக்கையின் தேவையை வலியுறுத்திப் பேசினார். அன்றைய காமராசர் தலைமையிலான காங்கிரசு அரசோ சென்னை என்றால் தான் வெளியுலகத்திற்குத் தெரியும் என்று கூறி, பெயர் மாற்றக் கோரிக்கையைப் புறக்கணித்தது.

இந்நிலையிலே தான் சங்கரலிங்கனார் 27. 07. 1956 அன்று விருதுநகரில் ஓலைக்குடிசையில் பேராயக் கட்சிக் கொடி பறந்திட உண்ணாநிலையைத் தொடங்கினார். அவர் நடத்திய உண்ணாநிலைப் போரை பச்சைத் தமிழன் காமராசரின் ஆட்சி அலட்சியப்படுத்தியது.

பிரதமர் நேருவோடு பேசி சங்கரலிங்கனாரின் உயிரைப் பாதுகாக்க வேண்டிய காமராசர் செய்தியாளர்களிடம், “இப்படியான பெயர் மாற்றங்களால் ஒரு பயனும் இல்லை. இது மக்களின் உணர்ச்சியைத் தூண்டி விடுகிற சமாச்சாரம். அவர் முன்வைத்த 12 கோரிக்கைகளில் 10 கோரிக்கைகள் மத்திய அரசோடு தொடர்புடையது“ என்று நழுவலாகப் பதிலளித்தார். அவரின் உண்ணாநிலைப் போரை நிறுத்தும்படி ம. பொ. சி, அண்ணாதுரை, ஜீவானந்தம் ஆகியோர் வேண்டுகோள் விடுத்தனர்.

அண்ணா அவர்கள் சங்கரலிங்கனாரை நேரில் சந்தித்தார். அப்போது, "எல்லையை வாங்க முடியாதா? இதில் என்ன கஷ்டம்? இதய சுத்தியோடு ஆந்திரா சர்க்காருடன் பேசினால் காரியம் நடக்காதா?" என்று கண்ணீர் சிந்தியபடி கேட்டதாக அண்ணா தம்பிக்கு எழுதிய கடிதத்தில் தெரிவித்துள்ளார். அவரின் உண்ணாநிலைப் போர் 60 நாட்களைத் தாண்டியும் காமராசரின் கல்மனம் கரையவில்லை.

அப்போது ஜனசக்தி துணையாசிரியர் தியாகி ஐ. மாயாண்டி பாரதிக்கு சங்கரலிங்கனார் கடிதம் எழுதினார். அதில், "காங்கிரஸ் ஆட்சியின் கொடுமை கடுமையாகி விட்டது. காந்தியம் மடிந்து கொண்டு வருகிறது. துரோகிகள் ஆட்சியில் உயிரோடு வாழ விருப்பமில்லை" என்று மனம் வெதும்பி எழுதியிருந்தார். அவரின் போராட்டத்திற்கு ஒன்றுபட்ட பொதுவுடைமைக் கட்சி முழுமையாகத் துணை நின்றது.

தான் இறந்தப் பிறகு பொதுவுடைமைக் கட்சியினரிடமே தமது உடலை ஒப்படைக்கும்படி சங்கரலிங்கனார் இறுதியாக வேண்டிக் கொண்டார். அவர் உயிருக்குப் போராடிய நிலையில் மதுரை எர்ஸ்கின் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு அங்கும் உண்ணாநிலையைத் தொடர்ந்தார். நாடி நரம்புகள் ஒடுங்கின. 79வது நாளில் அவர் உயிர் பிரிந்தது. 1952இல் பொட்டி சிறிராமுலுவின் மரணம் தெலுங்கர்களை விழிக்க வைத்து ஆந்திரப் பிரதேசம் என்ற பெயரில் தனி மாகாணம் கண்டது.

ஆனால் சங்கரலிங்கனாரின் மரணமோ காங்கிரசின் துரோகத்தாலும் திராவிடக் கட்சிகளின் 'திராவிட நாடு' குழப்பத்தாலும் தமிழர்களைத் தூங்க வைத்தது. ஹைதரா பாத்தும் இதரப் பகுதிகளும் ஆந்திரப் பிரதேசமானது. திருவி தாங்கூரும் இதரப் பகுதிகளும் கேரளாவானது.

ஆனால் சென்னை மாகாணமும் இதரப் பகுதிகளும் தமிழ்நாடாக மாறவில்லை. சரியாக 11 ஆண்டுகள் கழித்து அண்ணா முதல்வரானப் பிறகே சென்னை மாகாணம் தமிழ்நாடானது. தமிழர்கள் தமிழ் நிலத்திற்குப் பெயர் சூட்டும் முன்னே தெலுங்கர்கள் தம் நிலத்திற்குப் பெயர்ச் சூட்டியக் கையோடு சும்மா நிற்கவில்லை.

அதற்காகவே உழைத்து மடிந்த பொட்டி சிறிராமுலுவைப் போற்றிடவும் முன்வந்தனர். ஆந்திர அரசு ஹைதராபாத்தில் 'பொட்டி சிறிராமுலு தெலுங்குக் கழகம்' நிறுவியும், அவர் நினைவாக நெல்லூர் மாவட்டத்தை 'பொட்டி சிறிராமுலு' மாவட்டம் என்றும் பெயர் மாற்றம் செய்துள்ளது. மத்திய அரசு பொட்டி சிறிராமுலுவிற்கு அஞ்சல் தலையையே வெளியிட்டது. "சென்னை இல்லாத ஆந்திரம் தலையில்லாத முண்டம்" என்று பேசிய பொட்டி சிறிராமுலுவிற்கு சென்னையிலேயே நினைவுச் சின்னத்தை எழுப்பியுள்ளனர்.

பொட்டி சிறிராமுலுவின் ஈகத்திற்கு எந்த விதத்திலும் சங்கரலிங்கனாரின் ஈகம் குறைந்ததல்ல. ஆனால் அவரை தமிழர்களாகிய நாம் என்றாவது கொண்டாடி இருக்கிறோமா? இல்லையே? அவர் மறைந்து 57 ஆண்டுகள் கடந்துதான் தமிழக அரசு அவருக்கு நினைவுச் சின்னமே எழுப்பியுள்ளது.

தமிழ்நாடு பெயர் சூட்டவும், தமிழ்மண் மீட்கவும் போராடிய சங்கரலிங்கனாரை தமிழர்களாகிய நம்மைத் தவிர வேறு யாராலும் நினைக்க முடியாது என்பதே வரலாறு உணர்த்தும் பாடமாகும்!

